# வீர மாகாளி வெண்பா மாலை



முனைவர். இராம. சிதம்பரம்

# வீர மாகாளி வெண்பா மாலை


"இளம் புலவன்"

முனைவர் இராம. சிதம்பரம்,

எம்.ஏ., எம்.பில்., பி.எட்., பிஎச்.டி.,

தமிழ்ப் பேராசிரியர்,

அ.வ.அ. க்கலைமாகா கல்லூரி,

வல்லம் - 613 403,

தஞ்சாவூர், தமிழ்நாடு.



வெளியீடு





மும்மகள் பதிப்பகம்

விண்ணமங்கலம் - 613 602

தஞ்சாவூர் மாவட்டம்.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | ஏப்ரல் 2002 |
| பதிப்புரிமை | : | "திருக்குறள் செல்வி"<br>சி. கலைமகள்<br>விண்ணமங்கலம் - 613 602<br>தஞ்சாவூர் மாவட்டம் |
| விலை | : | **ரூ. 15/-** |
| அச்சு வடிவம் | : | தொன்போஸ்கோ ஆஃப்செட் பிரிண்டர்ஸ்<br>தஞ்சாவூர் - 1. |

"This book is published with the
financial assistance of
**TIRUMALA TIRUPATI DEVASTHANAMS**
Under their scheme
Aid to publish religious books"

எந்தைக்கும், அண்ணனுக்கும்

ஜெயராமனுக்கும், சிவாவிற்கும்,

என் மாமனார்க்கும், இயற்கைச்

சீற்றத்தில் இறையடி சேர்ந்த

எண்ணற்ற மக்களுக்கும்,

எனையூக்கி இந்நூல் உருவாக்கிய

இனிய மாணாக்க உள்ளங்களுக்கும்

இந்நூலைக்

**காணிக்கையாகப்**

படைக்கின்றேன்.

## தமிழ் மகள்

பொங்கப் புகழ்பரப்பும் பொதுமறையைப் பொட்டாக்கி
வங்கக் கடற்பரப்பை வனிதையுன் வளையாக்கி
மங்காக் கவியழகை மாமணிமே கலையாக்கிச்
சிங்கத் தமிழ்த்துறவி செய்திகளைச் சிலம்பாக்கிச்
சங்க இலக்கியத்தைச் சாற்றுமெழில் உடையாக்கித்
தங்கத் தமிழ்முனிவன் தருபாதை நடையாக்கி
மங்கல நாணேற்க மனமுவக்கும் முகமாக்கும்
சங்கத் தமிழ்மகளே! சார்ந்தெம்மை வாழ்த்துகவே!

## கலைமகள்

தாயே ! தமிழ்ச்சுடரே ! தாங்கும் கவிக்குயிலே!
நீயே ! குறளரசி நெஞ்சுரம் தந்து
புகழைக் குழைத்துத் திறனை வளர்க்க
மகளாய்ப் பிறந்தாய் மகிழ்ந்து.

## உலக நாயகி

கற்றவரும் மற்றவரும் கற்றிவரும் பொற்கமலப்
பாதம் கொண்ட தாயே!
பாசம் காட்டு வாயே!

கொற்றவரும் பற்றவரும் சிற்றரகம் வெற்றியுறும்
வீரம் தந்த தாயே!
வீர காளி நீயே!

விண்ணுலவும் வெண்ணிலவும் மண்ணுலவச் செய்பவளே!
கோடைச் சாரல் முகமே!
வாடைக் காற்றின் வளமே!

தண்ணொளியைப் பெண்ணுருவக் கண்ணொளியில் பெய்பவளே
தாகம் தீர்க்கும் புனலே!
தட்பம் போக்கும் கனலே!

நாட்டமுள கூட்டமதின் வாட்டமெலாம் தீர்ப்பவளே!
நாதம் கூட்டும் இசையே!
வேதம் காட்டும் இறையே!

வேதபரி பூரணியே! நாதமுனி சோதரியே!
சூலம் ஏந்து கரமே!
நாளும் இன்பம் தருமே!

# அணிந்துரை

**திருமதி. புலவர். த. பாக்கியலட்சுமி, எம்.ஏ., பி.எட்.,
சர்சிவசாமி ஐயர் நூற்றாண்டு மகளிர் உயர்நிலைப்பள்ளி,
திருக்காட்டுப்பள்ளி.**

இன்றைய உலகில் மொழியுணர்வும், இறையுணர்வும் மாந்தர் மனத்தில் மங்கி வருவதை நாம் உணர்கிறோம். அத்தகு வேளையில் தாம் கற்ற தமிழுக்குத் தொண்டாகவும், அம்மன் மீது கொண்டுள்ள ஆன்மீகப் பற்றின் வெளிப்பாடாகவுமே இந்தப் பாமாலை 'வீரமாகாளி வெண்பாமாலை' என்னும் பெயரில் வெளிவருகின்றது எனலாம்.

இந்நூலாசிரியர் முனைவர். இராம. சிதம்பரம் அவர்கள் தமிழ்க் கல்லூரியில் பயிலும் பருவத்திலேயே பாக்களையியற்றும் திறம் பெற்றவர். மரபுக் கவிதையின் மகத்துவத்தைப் பேணிக் காக்கவே வெண்பாக்களின் வகைகளால் தொடுத்து மாலையாய் 'வீரமாகாளி வெண்பாமாலை' என்று வழங்கியிருக்கிறார்.

குறிப்பாக வெண்பாவின் இலக்கணம் பிறழாமல், அதன் வகைகளுக்கேற்ப, நயமும் மிளிர இயற்றியமைத்துள்ளார். ஆசிரியர் தமக்காக மட்டுமன்றிச் சமுதாயத்திற்காகவும் காளியை வேண்டுகின்ற பாடல்கள் ஒவ்வொன்றிலும் பராசக்தி பரிணமிக்கிறாள். இந்நூலைக் கற்கும்போது வளர்ந்து வரும் அறிவியல் உலகில் வாழ்வியல் நெறியான அமைதியை உள்ளத்திற்கு வழங்கும் என்பதில் வியப்பில்லை.

இந்நூலாசிரியர் திரு. முனைவர். இராம.சிதம்பரம் அவர்களின் பணி சிறக்கவும், வாழ்வு செழிக்கவும் வாழ்த்துகிறேன்.

த. பாக்கியலட்சுமி

# உள்ளடக்கம்

# முகவுரை

*சங்கம் திருவிச் சரியா சனம்கண்ட*
*மங்கா மதுரைத் தமிழ்*

அற்றை நாள் இலக்கியங்களில் மாந்தர்தம் வாழ்வியல் நெறிகளே வகுக்கப்பெற்றன. வீரத்தையும், காதலையும் தம் இருகண்களெனப் போற்றி வாழ்ந்த தமிழர்கள் அகப் பாடல்களையும் புறப்பாடல்களையும் இயற்றிப் பெருமிதம் கொண்டனர். அகம், புறம் மட்டுமே சிந்தித்த மனிதன் ஆண்டவனைச் சிந்தித்த காலம் குறைவானதே என்று கூறலாம். அகமும், புறமும் என நூல்கள் பலவாறாய்ப் பாடப்பெற்ற எட்டுத்தொகை நூல்களுள் திருமால், முருகன் ஆகிய கடவுளரைப் பாடும் நூலாகப் பரிபாடல் திகழ்கின்றது. தெய்வங்களைப் பாடுவதுடன் வைகை நதியைப் போற்றிப்பாடும் பாங்கினையும் அறியலாம். பின்னர், பத்துப்பாட்டு நூல்களில் முதன்மையாய்க் கூறப்பெறும் திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் பக்தர்களை முருகப் பெருமானிடம் அருள்பெற ஆறுபடைவீடுகளை நோக்கி ஆற்றுப்படுத்தும் நெறி போற்றுதற்குரியதாம்.

பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு நாயன்மார்கள், ஆழ்வார்கள் போன்ற சமயச்சான்றோர்களால் பக்திப் பாடல்கள் பரவலாய்த் தோன்றின. இழந்து போகும் நிலையில் இருந்த இறைச் சிந்தனையை மக்கள் உளத்தில் மறைந்துபோகாமல்எழச்செய்த பெருமையும் சிறப்பும் இந்தச் சமயக் குரவர்களுக்கே உரியன. பெருமாள்மீதும் பெருமாட்டிமீதுமெனப் பல்வேறு பாடல்களும் இயற்றப்பெற்று, நூல்களாகவும் வெளிவந்து கடவுள்நெறியைக் காத்து வந்தன.

யாப்பிலக்கண நெறிப்படியமைந்த பலவகைப் பாவடிவங்களோடு நூற்கள் பலப்பல தோன்றலாயின.

மானிடத்தின் மகத்துவம் மலரவும் மனத்தகத்தே பக்திநெறி மணக்கவும் இவ்வகைப் பக்தி நூற்கள் பெரிதும் துணைபுரிந்தன. அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் நான்கும் அகன்று மனிதன் மேன்மையுற வழிகாட்ட எழுந்த பக்தி இலக்கியங்கள் தத்தம் பணிகளைச் செய்து கொண்டுள்ளன.

பராசக்தியின் வடிவமாகவும் பாமரரின் வழிபடு தெய்வமாகவும் திகழ்ந்து பார்காக்கும் அன்னை வீரமாகாளியின் மீது வெண்பாக்கள் பாடி அவற்றைப் பாமாலையாக்கிப் படைக்கும் பேரவாகொண்டே பெரும் பணியாய் இதனைச் செய்யப் புகுந்தோம். அன்னையின் அருளாலும் ஆன்றோரின் ஆசியாலும், பணிசிறக்கவும் பயன் வளர்க்கவும் பாடுபடுவோம்.

இந்நூல், வெண்பாக்களின் வகைகளான குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, வெண்பா, பஃறொடை வெண்பா எனப் பல பாவடிவங்களில் யாப்பருங்கலம் வகுத்துள்ள செய்யுள் இலக்கண நெறிகளுடன் வெண்பாக்கள் அமைந்துள்ளதால் ''வீரமாகாளி வெண்பா மாலை'' எனப் பெயர்தாங்கியுள்ளது.

வெண்பாக்களின் இலக்கணமும், செய்யுள் நலமும் அமைந்திருக்கும் போதிலும் அனைத்து வெண்பாக்களிலும் அன்னை வீரமாகாளியே ஊடுருவித் திகழ்ந்து உலகநாயகியாய்ப் பார் போற்றும் பராசக்தியாய்ப் பயில்வோர்க்கு நலமருள்வாள்.

அவளன்றி ஒருபொருளும் இயங்காது - சக்தி
அனுதினமும் தொழமனமும் தயங்காது.

இராம. சிதம்பரம்

# தலவரலாறு

ஆன்மீகமும் அமைதியும் குடிகொண்டிருந்த நாடுகளுள் முதன்மையான இடத்தில் இருந்ததுதான் பாரதம். இங்கே இயற்கை வளங்களையும் மனித மாண்புகளையும் பெற்றுத்திகழ்கின்ற தமிழகத்தில் இலக்கியச் சோலை பொலிவுற்று விளங்கியது. ஆன்றோர்களும் சமயச் சான்றோர்களும் நிறைந்திருந்து மண்ணின் மகத்துவத்தைப் பேணிக் காத்து வந்தனர்.

பாரதநாட்டு மக்களின் பக்தி உலக அரங்கில் உயர்ந்த இடத்தைப் பெற்றிருந்தது என்பது மறுக்க முடியாத உண்மை.

கரையெல்லாம் செழிக்கப் பாய்ந்து வரும் காவிரி வான்பொய்ப்பினும் தான் பொய்யாமல் சோழமண்டலத்தை நெற்களஞ்சியமாய்ப் பேணி வருகின்றது. முடியுடை மூவேந்தருள் சோழர்கள் ஆட்சிசெய்து வந்த பகுதிகளுள் ஒன்றாம் திருச்சி மாவட்டத்தில் பண்டை நாளிலும் தற்போது புதுக்கோட்டை மாவட்டத்திலும் அமைந்திருக்கும் திருத்தலமே வத்தனாக்கோட்டை பெரம்பூர். புதுக்கோட்டை மாவட்டத்தின் வடக்காயும், தஞ்சாவூர் மாவட்டத்தின் தென்மேற்கெல்லை முடிவிலும், திருச்சி மாவட்டத்தின் தென்கிழக்கெல்லை முடிவிலும் அமைந்திருக்கும் இந்த அழகுத் திருவூராம் பெரம்பூரில் வீற்றிருந்து அருள்மாரி பொழியும் கருமாரியே அன்னை வீரமாகாளி.

பழங்காலத்தில் பாதாளகாளி என்றழைக்கப்பெற்ற காளியம்மன் தான் வீரமாகாளி. பாதாளகாளி, நிம்மியாண்டவர், செம்முனி என்று மூன்று தெய்வங்களும் சேர்ந்து ஒரே இடத்தில் இருந்து தங்களுக்குரிய பூசைகளை ஏற்று வந்தனர். அக்காலத்தில் வாழ்ந்த மக்கள் காளிக்கு எருமைக்கடா பலியும், செம்முனிக்கு நரபலியும் கொடுத்துவந்தனர். ஆண்டுக்கொருமுறை திருவிழாநாளில் இந்தப் பலிகள் கொடுக்கப்பட்டன. முப்பது குடும்பத்தைச் சேர்ந்தவர் இந்தக் கட்டுப்பாட்டில் காளிக்கும் செம்முனிக்கும் பூசை செய்துவந்தனர். ஒருகுடும்பத்தில் ஓர் ஆண் மகனைக் 'காவு' கொடுப்பதைக் கடைப்பிடித்து வந்தார்கள். செம்முனி 'மனுகாவு' கொள்வதையே மகிழ்ச்சியாக ஏற்றுவந்தது.

ஒருகுறிப்பிட்ட ஆண்டுத் திருவிழாவில்மனிதபலி கொடுக்க வேண்டிய குடும்பத்தில் விதவைத்தாய் தன் ஒரேமகனுடன் வாழ்ந்து வந்தாள். தன் ஆசைமகனை ஆண்டவனுக்குக் 'காவு' கொடுத்துவிட்டால் தன் குடும்ப வம்சமே அழிந்து போய்விடுமெனக் கருதிப் புலம்பி நிம்மியாண்டவரிடம் போய்க் கண்ணீர் மல்கக் கதறி முறையிட்டாள்.

ஒரு நிராதரவாள தாய் வந்து தன்னிடம் கண்ணீர் வடிப்பதைத் தாங்கவொட்டாமல் நிம்மியாண்டவர் பண்டாரவடிவம் தாங்கி வீரப்பூர் சென்று அங்குக் குடிகொண்டிருந்த வீரமாமுனியிடம் கையேந்திக் குறைதீர்க்க முறையிட்டு நின்றார். தவசுமுனி என்னும் பெயரிலே அங்கிருந்த ஆண்டவர், ''நான் வந்து செம்முனியைக் கட்டுப்படுத்தி மனித காவு கொடுப்பதைத் தடுத்து நிறுத்தினால் என்மனம் மகிழ நீயாது செய்வாய்? எனக் கேட்க நிம்மியார், ''குட்டியும் முட்டியும் தருகிறோம். அதாவது வருடத்திற்கொருமுறை ஆட்டுக்கிடாய் ஒன்றும், ஆறுமரக்கால் நெல்லும் உனக்காகத் தருகிறோம்'' என்று கூறத் தவசுமுனி புறப்பட்டுப் பெரம்பூர் வந்தது.

பெரம்பூர் வந்த தவசுமுனி செம்முனியிடம் ''மனுகாவு இனி உனக்குக் கிடையாது வேறு கேட்டுப் பெற்றுக்கொள்'' என்று கூற அதற்குச் செம்முனி மறுத்ததால் சினங்கொண்ட தவசுமுனி தன் கால் கட்டை விரலால் செம்முனியை அழுத்தி நிலத்துக்கடியில் அனுப்பிவிட்டது. தவசுமுனி தன் தங்கையாகிய பாதாள காளியிடம், ''காளி! உனக்கு இனி எருமைக்கிடா காவு கிடையாது. பெட்டைக்கோழி மட்டுமே காவு கொடுக்கப்படும்'' என்று கூறியதைக் காளி ஏற்றுக் கொண்டதும், சத்தியம் வாங்கிக் கொண்டது.

அப்போது முதல் தவசுமுனி வீரமாமுனி எனவும் பாதாளகாளி வீரமாகாளி எனவும் பெயர்கொண்டு வீற்றிருக்கின்ற சிறப்பினை யாவரும் அறியலாம்.

ஆண்டுதோறும் சித்திரைமாதத்தின் கடைசி ஏழு நாட்கள், வைகாசித் திங்கள் முதல் ஏழுநாட்கள் எனக் கணக்கிட்டு அந்தப் பதினைந்து நாட்களுக்குள் அக்னி நட்சத்திரத்தையும் கருதிச் சித்திரையின் கடைசியில் காப்புகட்டி வைகாசிமாத முதல் வெள்ளிக்கிழமை திருவிழா வருமாறு திட்டமிட்டு அந்தக்காலம் முதல் இன்று வரையிலும் சிறப்பாகக் கொண்டாடி வருகிறார்கள்.

திருவிழாவில் பொங்கல் வைத்து இறக்கி அந்தச் சோறறுடன் மனிதத் தொடை ரத்தத்தைக் கலந்து நிலத்தடியில் இருக்கும் செம்முனிக்குப் பில்லிச்சோறு தருதல் என்னும் முறையிலும், ஆட்டுக்கிடாய் வெட்டி ஆறுமரக்கால் நெல் வைத்துக் குட்டியும் முட்டியும் வழங்கி வீரமாமுனிக்குப் பூசை செய்யும் முறையும், பெட்டைக்கோழி தந்து பெரும்பூசையை வீரமாகாளிக்குச் செய்கின்றமுறையும், தேங்காயும் தீபாராதனையும் தந்து நிம்மிலியாண்டவர்க்குப் பூசை செய்யும் முறையும் இன்றும் நடைபெற்று வருகின்றது.

மனிதர்கள் எளிதில் செல்ல முடியாத அளவிற்கு அடர்ந்த காட்டுப் பகுதியில் எழுந்தருளியிருந்த வீரமாகாளிக்குப் பொழுது விடியாப் போதாகிய விடியற்காலையிலும் அந்திவேளையிலும் என அன்றாடம் பக்தியுடன் பூசையைத் தொடர்ந்து வந்தனர் அவ்வூர் மக்கள்.

நின்று தளரா வளர்தெங்கு தாள்உண்ட நீரைத் தலையாலே தான் தருதலைப் போல, அன்று பசியும் பஞ்சமும் தன்னலமும் பாராமல் பராசக்தியாம் அன்னை வீரமாகாளிக்குப் பூசைகள் செய்ததாலும் வட்டிக்குக் கடன் வாங்கித் திருவிழாக்கள் பண்டை நாளில் கொண்டாடியதாலும் மனமிரங்கும் தாயானவள் இன்று மன்பதை போற்றும் மாகாளியாக நின்று உலகு புரக்கின்றாள்.

அன்னை வீரமாகாளி எழுந்தருளியிருக்கும் அங்கு 1974-ஆம் ஆண்டில் கிராமத்தார் சேர்ந்து சிறுகோயிலாய்த் திருக்கோயில் அமைத்தனர். 1989-ஆம் ஆண்டில் ஸ்ரீரங்கம் ஜீயர்மடத்துச் சுவாமிகள் வந்து ஆலயத்திற்கு அழகு சேர்த்துக் குடமுழுக்கும் நிகழ்த்தினர். 1991-ஆம் ஆண்டிற்குப் பிறகு வெளியூர் மக்களுக்கும் அன்னையின் அருள் வலிமை புரியத் தொடங்கி வழிபடும் உள்ளங்கள் நிறைந்து வழியத் தொடங்கின.

சோகச் சுமைகளோடு சென்று மனமுருக வேண்டுவார்க்குச் சுகமளிக்கின்ற தாயாக, நல்லன எண்ணுவார்க்கு வல்லமை கூட்டும் தலைவியாகக், காணாமல் போனபொருள் கைக்குக் கிடைக்கச் செய்யும் காவல் தெய்வமாகச், செய்வினையால் அல்லலுறும் மக்களுக்கு நல்வினை நல்கும் நாயகியாக, எளியோர்க்குத் துணையாக, ஏய்ப்போர்க்குக் கணையாக, மனத்திலே ஈரமுடையார்க்கு மழையாக, இல்லாமை, இயலாமையால் இரப்போர்க்கு வள்ளலாக, நம்பிக் கைதொழுவார்க்கு நலமெல்லாம் சேர்த்தளிக்கும் தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமாகத் திகழ்கின்ற வீரமாகாளியை வேண்டுவோம் இணைந்து.

# வெண்பாவின இலக்கணம்

**வெண்பா - பொது இலக்கணம்:**

மாமுன் நிரையும் விளமுன் நேரும் கொண்ட இயற்சீர் வெண்டளையும், காய்முன் நேர் எனும் வெண்சீர்வெண்டளையும் பெற்று வரும்; பிற தளைகள் வரலாகா.

ஈற்றடி முச்சீராயும், ஏனைய அடிகள் நாற்சீராயும் வரும்; ஈற்றடியின் ஈற்றுச்சீர் நாள், மலர், காசு, பிறப்பு எனும் வாய்பாடுகளுள் ஒன்றான் முடியும்; தனிச்சொல் பெற்றும், பெறாதும் வரும்; செப்பலோசையுடைத்தாயிருக்கும்.

**நேரிசை வெண்பா:**

நான்கடிகளைக் கொண்டு, பிறதளை கலவாமல், இரண்டாமடியின் ஈற்றில் தனிச்சொல் பெற்று, ஒரு விகற்பத்தாலோ இருவிகற்பத்தாலோ மட்டும் வரும்.

விகற்பம் : அடிகளின் முதற்சீர் எதுகை மோனை இயைதல்.

**இன்னிசை வெண்பா:**

நேரிசை வெண்பா அல்லாத, பிறதளை கலவாத நான்கடிகளால் வந்த பிற வெண்பா.

வெண்பா என்பதே நான்கடிகளான் வந்த நேரிசை இன்னிசை வெண்பாக்களையேயுணர்த்தும். ஏனையன அடியளவால் வெவ்வேறு பெயர் பெறும்.

**குறள் வெண்பா:**

வெண்பாவின் இலக்கணம் பெற்று இரண்டடிகளான் வருவது.

**சிந்தியல் வெண்பா:**

வெண்பாவின் இலக்கணத்துடன் மூன்றடிகளான் வந்து நேரிசை, இன்னிசை என்னும் மேற்கூறிய நெறிகளைப் பெற்றுவரும்.

**பஃறொடை வெண்பா:**

வெண்பாவின் இலக்கணங்களோடு, ஐந்தடியும் அதற்கு மேலும் பெற்றுவரும்.

''அடிபலவாய்ச் சென்று நிகழ்வ பஃறொடையாம்''
என்று யாப்பருங்கலக் காரிகையும்

''தொடையடி யித்துணை என்னும் வழக்கம்
உடையதை யின்று உறுப்பழிவில்லா
நடையது பஃறொடை நாமம் கொளலே''

என்று காக்கைப்பாடினியாரும் பஃறொடை வெண்பாவின் இலக்கணம் வகுக்கக் காணலாம்.

கலிவெண்பா: (வெண்கலிப்பா)

''வான்தளைதட்டு இசை தனதாகியும் வெண்பா இயைந்தும் விசையறு சிந்தடியால் இறுமாய்விடின் வெண்கலியே'' என்பது

கலித்தளை தட்டுக் கலியோசை தழுவியும்,
வெண்டளை தட்டு வெள்ளோசை தழுவியும் வந்து
ஈற்றடிமுச்சீரான் இறுமெனின் அது வெண்கலிப்பா
என்றும் கலிவெண்பா என்றும் வழங்கப்படும்.

பெயர்ப்பொதுமை நோக்கியே கலிவெண்பா இங்குக் கூறப்பட்டது. கலிவெண்பா (வெண்கலிப்பா) கலிப்பாவகையினுள் அடங்கும்.

தமிழ்கூறு நல்லுலகில் செய்யுள் நெறியியலார் வகுத்த வெண்பா இனத்தைச் சுட்டக் கருதியும், இற்றைநாளில் மரபுச் செய்யுள்களின் மாண்பினைப் பேணுதல் கருதியும், அன்னை வீரமாகாளியின் அருள்பெறக் கருதியும் இந்நூல் படைக்கப் பெற்றுள்ளது. பக்தி நூலாதலின் சில இடங்களில் வடசொற்கள் வந்துள்ளன.

# "வீரமாகாளி வெண்பா மாலை"
## வெண்பா

**காப்பு:**

பூமணக்கும் காவில் புயல்மணக்கும் மாகாளிப்
பாமணக்கும் நாவில் தமிழ்மணக்கும் - தேமணக்கும்
வெண்பாப்பொன் பாமாலை சூட்டியவள் தேசுபெறக்
கண்பார்க்கும் ஆனைமுகன் காப்பு.

**நூல்:**

ஆறா மனத்தையிங் காற்றுகிற சக்தியவள்
கூறாய் இடங்கொண்ட கோமகள் - நாறா
மலர்புனைந்த நற்றமிழ்ப் பூமாலை யேற்று
நலம்புரிய நிற்பாள் நயந்து

கரும்பும் கடலைப் பயிர்வகையும் காவில்
அரும்பும் மடல்கொள் மலர்த்தொகையும் யாண்டும்
நிலத்தில் செழுமை நிறைந்திருக்கத் தஞ்சைத்
தலத்தும் அருள்கொழிப்பாள் தாய்.

மாவிளக்குக் காட்டின் மனமிரங்கும் மாகாளிக்
கோவிலுக்குள் செல்லமனம் கூட்டுமோர் - ஆவலினால்
பாயிரம் பாடின் பருவரல் தீர்த்தெழுவாள்
ஆயிரம் கண்ணுடை யாள்.

பாவாக்கும் பைந்தமிழ்ப் பாமகளின், பல்லோரைக்
கோவாக்கும் செல்வத் திருமகளின் - பூவாக்கும்
வெற்றி படைக்கின்ற வீரமா காளியைப்போய்ச்
சுற்றித் துயர்விலகச் சூழ்.

காரேறிச் சூழக் கழனி நிறைந்திலங்கும்
ஊரேறும் மாந்தர் உவந்து தொழவிளங்கும்
போரேற்றுத் தாருகன் பேருரஞ் சாய்த்தென்றும்
தாரேறும் தாயைப் பணி.

அங்கம் குளிர அலகுபல பூட்டியுளம்
பொங்குமருள் கூடிப் புறப்படு வோர்கோடி
தங்கமுக வேலவன் தாயே, பராசக்தி!
சிங்கமுக வாகனத்தில் சேர்.

இளமுகி லாங்குழல் ஈர்மது போலே
உளமகிழ் வோடெமை உன்னரு ளாலே
குளநிறைத் தண்பூ மனத்தினும் மேலே
வளம்பெற வாழ்த்திடு வாய்.

போர்த்திற மாகும் புவியர சர்க்கெலாம்
தேர்த்திற மாகும் திருவிழா போற்றிடின்
ஊர்த்திற மாகும் உயர்குல மானிடர்
கார்த்திறங் காண்பர் களித்து.

**பொன்னை அளக்குமந்தப் பூமகளும் பொங்கிவரு**
**பண்ணை விளக்குமந்தப் பாமகளும் - பொன்னி**
**மருங்கிற் செழிக்கும் புவிமகளும் உன்னோ**
**டொருங்கிணைத் தேத்திடு வோம்.**

**மாலிருக்கும் நெஞ்சகத்தில் மஞ்சள் முகத்தாளின்**
**காலிருக்கும் கண்ணுளே நின்றாடும் காளியவள்**
**சூலிருக்கும் சூழ்வினை போக்கிச் சுகந்தருவாள்**
**வேலிருக்கும் செவ்வேளின் தாய்.**

**மண்பிளந்து நாளும் மலைபிளந்து வாழ்வார்க்கு**
**விண்பிளந்து வீழும் மழையின்பம் வேறுசிலர்**
**பெண்பிறந்தாற் சூழும் பெருங்கொலை யுள்ளத்தைக்**
**கண்திறந்து காளியே காண்.**

**அகத்தழுக்கைப் போக்காமல் ஆயிரம்பேர் கூடிச்**
**செகத்தழுக்கைப் போக்கும் செயலில் - புகத்தேரின்**
**சொல்லொணாத் துன்பமே சூழும் நிலைமாற்றும்**
**வல்லவீர மாகாளி வந்து.**

**வாயினுக்குச் சோறின்றி வந்தபசி போக்குதற்குன்**
**வாயிலுக்கு வந்து வழிகேட்கும் மாந்தருக்குள்**
**தாயின் திருவடியில் தாழ்வுயர்வுச் சாதியில்லை**
**மாயை மனத்தின்று மாற்று.**

உலைக்கரிசி யில்லா துழைத்துவரு வாயில்
விலைக்கரிசி வாங்குவோர் வேண்டினால் ஆய
கலைக்கரசி வீரமா காளியெனும் மேரு
மலைக்கரசி காப்பாள் மகிழ்ந்து.

திருவுடையார் கோடி தொழுதிடுமோர் தஞ்சைப்
பெருவுடையார் கூடிப் பெருமையுறு பெண்ணே!
கருவுடையார் பாடிக் களிப்படைவர் நாளும்
அருளுடைய அன்னை யுனை.

பட்டுவரு துன்பம் பலகோடி யாமெனினும்
கிட்டுமொரு பேரின்பம் கேடிலியாள் - கொட்டுமழைக்
கொண்டல் திருவருளால் கூடும் கருங்கறைக்
கண்டன் துணையாளைக் காண்.

வாயெல்லாம் காவா வருசொல் இயல்பறியாக்
காயெல்லாம் ஏற்றுக் கனிமறுக்கும் எல்லார்க்கும்
நோயெல்லாம் வந்துற்றால் நொந்து வருந்துவர்
தாயெல்லாம் தீர்த்திடுவாள் என்று.

புள்ளினம் ஆர்த்தெழப் பூவையர் சேர்ந்தெழ
வெள்ளியில் கோவிலில் வேண்டிடத் - துள்ளிடும்
மானிடர் மேனிகொள் மானம் மறைத்திட
வானியல் காளி வரும்.

ஒன்றா யிருக்கும் உலகம் புரக்க
இரண்டாய் இணைந்த இறையே! முழுமுதல்
மூன்றுடைக் கண்ணார்க்கு முன்னால் துணைவருவாய்
நான்கு மறையாய் நடந்து.

நோய்நாடித் தீர்க்கின்ற நுட்பமெலாம் நீயறிவாய்
தாய்நாடி வந்தேங்கும் தண்குழவி போல்வார்க்குப்
போய்நாடிக் காக்கின்ற போக்கினளே! இல்வரு
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

கள்ளிருக்கும் மாதர் கனியிதழில் பூங்குழலில்
புள்ளிருக்கும் தேனின் சுவைபெருக்கும் - வெள்ளெருக்கம்
பூவின் வினைபெருக்கும் பொய்யர் களையறுக்கும்
காவின் அரசியுன்றன் கண்.

திசைதொறும் பூக்கள் மணம்பரப்பும் ஒவ்வோர்
அசைவிலும் சக்தி திறம்பெருக்கும் கூடல்
கசையடி பெற்ற கறைக்கண்டன் ஓங்கும்
மிசைவளர் மேருவைப் போல்.

காவல் இலங்கைக் கலங்கிடு மாந்தர்தம்
ஆவல் விளங்க அருள்நிறை வோடுமகிழ்
மேவப் புரந்திடு மின்னிடைக் காளியின்
கோவில் வலம்வந்து கூறு.

கொந்தளிக்கும் கூட்டமதின் கூக்குரலைக் கேட்டவுடன்
வந்தளிக்கும் மாதரசி வாழ்வளிக்கும் - செந்தமிழர்
வாட்டமுறும் போழ்தில் வரமளிக்கும் மாகாளி
வீட்டோ டிருக்கவே வேண்டு.

கூனல் மதியினைக் கொன்றை மலரினைத்
தானும் விரும்பியே தன்னந் தனியளாய்
வான வெளியில் வலம்வரு வாளெனக்
கானக் குயிலுரைக்கும் காண்.

பழந்தான் எனச்சொலிப் பாவமெனப் பார்க்க
முழந்தாள் இடவும் முடியா(து) - உழந்தார்
திருமேனித் துன்பமெலாம் தீர்த்தருளும் தெய்வம்
கருமாரித் தாயே! நீ காப்பு.

பழிபாவம் விட்டுப் பரிகாரம் கேட்போர்
வழிகாட்டும் காளி வரவேற்கும் பாச
விழிகூட்டும் காதல் வினைநீக்கும் போக்கில்
மொழிகேட்டு முந்தும் முகம்

தீகால் நிலநீர் வடிவாய் நிலைபெறுநல்
ஆகா யமாய்நின் றிலங்கும் அழகுருவே!
பாகா யிளகுமிப் பாவியேற் காயிரங்கும்
மாகாளி உன்றன் மனம்.

நொந்திருந்து நாள்தோறும் நூறுவகைத் துன்பத்தால்
வந்திருந்து வாசல் வணங்கிடுவோர் - சிந்தையில் நீ
தெள்ளமுதாய்த் தேனாய்த் தெவிட்டாத பேரழகாய்
உள்ளவரை ஓயா தொளி.

வானகத் தார்க்கு வருதுயர் போக்கிடத்
தானை யிலாது தனித்தே அரக்கனைக்
கானகத் தாயே! கடிந்தனை நீயே! எம்
ஊனகத் துய்ப்போம் உனை.

குலையாத கட்டுக் கலையாத பொட்டுக்
குலமாதர் கொட்டும் மலர்மாரி மட்டும்
நிலையான இன்பப் பெருவாரி கிட்டும்
மலைமேவு மன்னை அழை.

மண்ணை அளந்தான் மகளுக்கு மாமியே!
பெண்ணை நதியின் பெரும்புனல் பாய்ச்சல்போல்
வெண்ணெய்த் திரட்சியென வெவ்வினைகள் கூடிவரின்
கண்ணைத் திறப்பாய்நீ காப்பு.

யாநலத்தும் சிந்தை செலுத்திச் செயல்புரிய
மாநிலத்தில் ஓங்கும் மனிதவளம் - பாநலத்தில்
ஓங்கும் பராசக்தி! உன்னருளை ஞாலத்தில்
வாங்கும் வரந்தரவே வா.

சாதலொத்த வாழ்வொறுத்துச் சாதிக்கும் புலன்தோறும்
பேதலித்துப் பேரரற்றும் பீடையேனைக் - காதலித்துக்
கண்ணாலே காட்டியெதிர் காலம் தரவேண்டும்
கண்ணாயி ரத்தாளே காப்பு.

தெளிவிலா உள்ளம் தெளிவுறச் செய்தே
துளியுலாம் தூறல் களிப்புறப் பெய்தே
எளிதிலாம் ஆற்றல் இயல்புறத் தந்தே
வளியெலாம் காளி வரும்.

மங்கா மரத்தடியில் தங்கிக் குறையகற்றும்
தங்கத் தலைமகளே தாயே! பவானி! நீ
எங்கும் நிறைந்திருந்து பொங்கும் அருள்புரிவாய்
இங்கே இருந்து விடு.

என்னவேண்டும் போதிலும் ஏழை மனமறிந்து
என்னவேண்டும்? என்றே எதிர்வருவாய் - சொன்ன
குறைபோக்கத் தாய்வடிவம் கொண்டுமடி யேற்பாய்
மறைகாக்கும் மாகாளி யே

நீசினந்தால் வானம் நெருப்பு மழைபொழியும்
நீசிரித்தால் தென்றல் நிலவுதொடும் - நீள்புவியில்
உன்னை வணங்காதார் உய்யாரே உய்வார்க்குப்
பொன்னை மழையாய்ப் பொழி.

தனக்குற வென்று தரணிவாழ் மாந்தர்
மனக்குறை யெல்லாம் மலைபோல் குவித்தால்
பனித்துளி யோட்டும் பகலவன் போலே
இனித்துயர் இல்லையென் பாய்.

தழைக்கின்ற நெல்லுக்குத் தன்வியர்வை பாய்ச்சி
உழைக்கின்ற கூட்டம் உயராதோ? வீழ்ந்து
பிழைக்கின்ற பேருக்குக் காலம் கனியாதோ?
மழைக்கண்ணாள் மாகாளி சொல்.

கங்கையவள் வார்சடையில் கொண்டிருக்கும் முக்கண்ணன்
பொங்குமருள் பூவுலகில் எஞ்ஞான்றும் - தங்கிடவே
அன்னை அரியா சனமுடைய நம்ஆத்தாள்
தன்னையிங்குத் தங்கவைத் தாள்.

தந்தது தாராத தெல்லாம் தரவல்ல
சிந்தை நிறைந்த சிவகாமி - செந்தளிர்க்
கைத்தல மேந்தியெமைக் காக்கும் கருமாரி
மெய்த்தல மீதென்றால் மேல்.

வாக்கினால் வார்க்கும் வளமுடைச் சொல்லுரு
வாக்கினால் ஆர்க்கும் துயரிலா - யாக்கையால்
நோக்கும் அலகெலாம் நோவுறக் காவடி
தூக்கத் தொலையும் துயர்.

வண்மைதரும் வாழ்விலுறும் இன்னல் மறந்திங்கே;
உண்மைதரும் மெய்யுணர்வின் ஊக்கம் உணர்ந்தவர்க்கே;
பெண்மைதரும்; பேரின்பப் பேறுதரும்; ஆமவற்றுள்
தண்மைதரும் தாய்காளித் தாள்.

வாளேந்து வண்கை வரமேந்து மற்றோர்கை
தாளேந்து சூர்வதைச் சூலேந்து செம்மலர்க்கை
கோளேந்து வார்தம் குலமேந்து மோர்கையால்
தோளேந்தித் துன்பம் துடை.

செங்கனகச் சீர்சடையில் சேர்மதியோ டங்கிருக்கும்
மங்கையவள் கங்கையென மாகாளி கண்டிலையோ?
எங்களைநீ காப்பதற்கே எண்ணுகிறாய் அங்கொருத்தி
செங்கண் சிவனா ரிடத்து.

அயல்வேந்தன் கற்கொணர்ந்த விற்கொடியின் வேந்தும்
வயல்வெளிகள் ஆளுகிற பாய்புலியின் வேந்தும்
உயர்மதிலின் மீதுலவும் மீன்கொடியின் வேந்தும்
மயல்தீர மண்டியிடும் மண்.

வெங்கண் விடையருடன் வீற்றிருக்கும் சாரணியைப்
பொங்குபுனல் மூழ்கியாம் போற்றுவமேல் - செங்கண்
சிவக்கச் சிறுமுறுவல் சீர்முகத்தில் பூக்க
உவக்க அமுதளிப்பாள் உண்.

ஏதிலார் தம்மை இழித்துரைக் கும்மறிவு
பேதியா மற்பேணும் நன்னயம் செய்தீரேல்
ஆதியார் மேருக் கதிபதியார் பாகத்து
மாதரார் மாரியார் காப்பு

எரிசுட ரென்ன விரிசடை வேந்தர்
திரிபுரம் தீய்த்திட்ட தீயின் - உரமருள்
கொற்றவை தாயே! குடிகளைக் காத்தோம்பி
மற்றவை தந்திடம் மா.

ஒருமை உலகினைக் காணும் உவகை
பெருமை படைக்கும் எனவே - அருமை
உடைய பணிபல செய்வோம் மடியை
அடையும் குழந்தை என.

அன்னையே! உன்னையல்லால் ஆரெவர் உண்டென
மன்னுசீர் மாரியைக் கண்டதும் - இன்னுயிர்
ஏங்கிடும் இன்னலைக் கொட்டிடின் அத்துயர்
தாங்குவள் தன்கரத் தான்

புலரும் பொழுதில் அலரும் மலரில்
உலரும் பொருளில் நிலவும் அழகே
பலரும் தொழவே வளரும் வடிவில்
மலரும் முகத்தை மலர்.

ஆலமர் அண்ணல் அரனவன் தாங்கிய
சூலமர் வேகச் சுடுகணை - போலமர்
வேல்விழி காட்டி வினையினை நீக்குவாள்
கால்வழி ஆசியால் காத்து.

சான்றோர் பழிநாணி யாக்கை உழைப்பாரேல்
ஈன்றாள் பசிபோகும் என்றெண்ணத் - தோன்றாப்
பிணியாளர் தோன்றிப் பணியாமல் யாண்டும்
பிணியாவர் பீழை செயின்.

அஞ்சுமஞ்சும் என்றா ருயிர்கெஞ்சு மஞ்சுவார்
நெஞ்சுமஞ்சும் நாளும் நிலைகுலைவார் - நஞ்சுண்டான்
நாயகியே! அஞ்சுவ தாகாதென் றச்சத்தைத்
தாயாகிக் கொஞ்சம் தகர்.

கூடி யுரையாற்றிக் கொஞ்சும் இயலாரைக்
கூடி மதியிழக் காமல் அறிவியல்
நாடி மதிவளர் நாட்டம் உடையோரைப்
பாடும் உரம்தருவாள் தாய்.

தழலமர்ந்த வேட்கை தணிவிக்க வேங்கை
நிழலமர்ந்த நேரிழையே! நேரும் - மழையமர்ந்த
வேளை விளையும் பயிர்நடுவே வீற்றிருக்கும்
காளீ! முகில்கூட்டம் காட்டு.

புத்தாண்டு பல்யாண்டு போற்று திருக்கோயில்
பத்தாண்டில் பார்வலம் வந்தாயே! - பத்திர
காளீ! களிகாண் பெரம்பூரில் கண்ணிறை
மாளிகை கண்டாயம் மா.

சூழாத வெவ்வினைகள் சூழ்தலைக் கண்டுமனம்
பாழாகப் போகின்ற பாங்காலே - வாழாத
மாந்தருக்கும் வாழ்க்கை நெறிகாட்ட வந்திடுவாள்
மாந்தளிர்க்கை மாரி மகிழ்ந்து.

இலையென்று சென்றால் இசைபாடி நின்றால்
மலையென்று தந்தே மகிழ்வாய் - நிலையன்று
வாழ்வே எனநீதி காட்டும் வடிவே! நீ
தாழ்வை யகற்றியருள் தா.

ஓலைக் குடிசையிலே மாலைக் கதிரறுத்த
வேலைக் களைப்பினிலே வேண்டிக் குடியிருக்கும்
சேலை நிகர்விழியார் சேர்ந்து தொழுதேத்தும்
சோலைத் திருக்கோயில் சொல்.

கலைமகளும் காண்பாற் கடல்மகளும் நெஞ்சார்
நிலமகளும் நீணாளெம் வாணாட்கு வாழ்த்தும்
மலைமகளும் கண்கவரும் வான்மகளும் ஒன்றாம்
குலமகள் மாகாளியெனக் கூறு.

எண்ணாத எண்ணிச் செயல்புரிந் தேங்குமிம்
மண்ணாளும் மாந்தர்க்கும் மாரி உடனருள
எண்ணில் அருந்தவத்தோள் ஏனைத் திருவுடையோள்
விண்ணில் வலம்வருவாள் வேண்டு.

பெய்கின்ற மாரியெலாம் பெய்தாலும் தேவியவள்
செய்கின்ற பேருதவி சீர்தருமே - வைகின்ற
பேருக்கும் வாழ்வளிப்பாள் வந்துகண் மாரிபெய்
வாருக்கும் கைகொடுப்பாள் காண்.

திருவனத்துள் கோயில் தெரிவுசெய் தாயே!
வருவனத்துள் பாதை வகுத்தாய் - தருவன
கேட்டுத் தலைமேல் தணலேந்தித் தண்டமிழ்ப்
பாட்டு பகர்வாரைப் பார்.

பொன்னகர் போற்றும் புவிமாந்தர் எல்லார்க்கும்
மின்னகர் காட்டும் ஒளிப்பிழம்பே - மன்னவர்
வெங்களத்து வீழ்த்தும் வெறும்பகைபோல் தீவினைகள்
உங்கரத்தின் ஆசியினால் ஓட்டு.

புலிவாலாய் எண்ணிப் புறப்பட்ட பல்லோர்
எலிவாலென் றெண்ணியே மாந்தார் - கலிகாலம்
வந்ததால் வாழ்க்கை வழிமாறும் அம்மனருள்
தந்ததால் தப்பும் தலை.

நாட்டைப் புரக்கின்றாய் நற்றாயே கந்தர்வக்
கோட்டைக்கும் மேற்காய்க் கனிவளம் சூழ்கிள்ளுக்
கோட்டைக்குத் தெற்காயும் தெவ்வர்போம் தேன்புதுக்
கோட்டைக்கு நேர்வடக்காய்க் கொண்டு.

ஆதிபரி பூரணியே! வேதபரி காரணியே!
நாதமுனி போற்றுகிற நாயகியே! - வேதனைகள்
போக்கிடச் சீறுமரி வாகினியே! சீர்கவிதை
ஆக்கிடச் சிந்தையுண் டாக்கு.

வாயசைத்துப் பாடி வழிகேட்கும் பக்தருக்கு
நீயசைக்கும் நீண்ட விழியசைவைக் காணுதற்குக்
கோயில் மிசைகூடும் கோடியுளம் காப்பதற்கு
வாயிலுக்கு வந்தருள் வாய்.

கொட்டும் மழைத்துளி சொட்டும் பனித்துளி
பட்டும் பயிர்செழிக் காததால் - கெட்டே
அழிவதைத் தொட்டே பொறாதவள் போற்றிப்
பொழிகுவள் அன்பு மழை.

கட்டை பயணமாய்க் காடகம் போம்வரை
கட்டுப்பா டில்லா மலேபலர் கண்ணுறப்
பட்டை யடிக்கிறார் பக்தி யிலாமலே
மொட்டை யடிக்கிறார் முன்.

புவிவாழ் உயிர்களைப் பொன்போல் புரப்பாள்
கவிவாழ் புலவரின் கையோ டிருப்பாள்
குவியாக் கரங்களும் குமபிட நிற்பாள்
தவியா தெமைப்புரக்கும் தாய்.

கானில் கிடைத்திட்ட தீங்கனிச் சாற்றுடன்
ஊனை வளர்க்கின்ற ஓர்பசு பால்கலந்து
வானை யளக்கின்ற வண்ணமா காளிக்குத்
தேனைக் குழைத்தூட்டத் தேடு.

அரங்கேறும் மாந்தர்க் கறிவேறும் என்றே
குரங்கேறிக் கொண்டாட்டம் போட்டால் - மரஞ்சூழும்
கோயில் எழுந்தருளும் கூர்வேலாள் மாகாளித்
தாயின் சினம்பொங்கும் தான்.

சாந்த சொரூபினி! சத்ய விநோதினி!
வீர சரோஜினி! வித்ய சுபாஷினி!
சூர சுகாசினி! சுந்தர மோகினி!
வீரமா காளியை வேண்டு.

இல்லார்க் கிருப்பார்க் கிரங்கிடும் நற்றாயே!
புல்லாகிப் பூடாகிப் பொன்பொருள் யாவுமாகிப்
பல்லாயி ரங்கோடி நல்லுயிர்போல் ஈந்தருள்வாய்
கல்லாய்க் கிடக்கு மெனக்கு.

ஒளிதரு தீப்பிழம்பாய் உள்ளத் துயர்வான்
வெளிதரு நீர்த்துளியாய்ச் சுற்றும் - வளிதரு
வாழ்வளிக்கும் தாயே!நீ நிற்கும் நிலந்தனில்
தாழ்வழிக்கப் பொங்கும் உலகு.

மதியத்துக் காணும் களங்க மனையர்
நிதியத்து நோக்கில் நிலைகுலைவார் நெஞ்சம்
பொதியத்துத் தென்றல் புகழ்மணம் காண்பார்
விதிவென்று வாழ்தல் விதி.

செவ்வாயில் வெள்ளியில் ஞாயிற்றில் சேர்கிற
வெவ்வினை யாளர் வினையறுக்கும் - செவ்வியாள்
வீரமா காளி விளையாடும் ஊர்கேட்டால்
யாருமே கூறுவார் கொள்.

நஞ்சையுண்டு நாற்றுநடும் தோற்றமுண்டு நற்பயிர்காண்
புஞ்சையுண்டு பூரணி மாகாளிப் பொற்கோயில்
தஞ்சமென்று தாள்பணிவார் மாக்குறைகள் போக்குகிற
நெஞ்சமுண்டு நேர்பாதி யாட்கு.

இல்லையொரு பிள்ளையென் றேங்கித் தினந்தொழப்போர்
சொல்லவொரு கிள்ளைமொழிப் பிள்ளையொன்றை-முல்லையென்ற
புன்சிரிப்பில் பூக்கவைப்பாள் போற்று திருபவானி
பொன்விரிப்பில் பூட்டி மகிழ்ந்து.

மலைமேல் விளக்கென மாண்புபா ராட்டும்
நிலையில் இருப்போரை நெஞ்சின் - தலைமேல்
இருத்தித் தழைக்கச் செயல்புரியக் காளி
ஒருத்தி யிருக்கிறாள் ஓர்.

நிலவாக நின்ற நெருப்பாளும் அம்மா
பலகாலும் போற்றிப் பரிந்தேத்தும் நாயேன்
நிலையாள வேண்டும் அபிராமி தாயே!
உலகாளும் உன்றன் அருள்.

வேலோடு குன்றில் விளையாடும் வேலன்தாய்
மாலோடு டன்பிறந்த மங்கை பராசக்தீ!
பாலோடு காவடிகொள் பக்தருக் காறுதலைச்
சூலோடு நின்றுநீ சொல்.

கன்று பசுதேடிக் காண வருமாடி
உன்றன் அருள்தேடி ஓடி வரும்கோடி
நின்று நெடும்பற்றில் நெஞ்சம் நிறைவுறுவார்
நன்றி மறவார் நயந்து.

சொல்லமனம் கூடுதம்மா சோலைமயில் ஆடுதம்மா
செல்லஇடம் தேடுதம்மா செந்திலகக் காளியம்மா
வல்லமையைக் காட்டுமம்மா வந்தருளைக் கூட்டுமம்மா
பல்லுயிரும் வேண்டுவதைப் பார்த்து.

போர்முறையால் பார்முறை செய்தமூ வேந்தருள்ளே
யார்நிறை வானவர் என்றறிய எண்ணாமல்
ஊர்முறை போற்றி உவந்தவர் சீர்பேண
வார்குழல்மா காளி வணங்கு.

மண்சிறந்து மாற்றார் மனம்சிறந்து வாழ்விக்கும்
பெண்பிறந்தாற் கொல்லும் பெருங்கொடுமைப் பேரழிய
விண்சிறந்த தாயே!நின் வெற்றித் திருமுகத்தின்
கண்திறந்து பேரொளியைக் காட்டு.

சூடா மலரெடுத்துச் சூட்டுமொரு மாலையுடன்
வாடா மலர்கொண்டு வந்தேமால் - ஓடா
நதிக்கரையோ உண்ணீர்க் குளக்கரையோ நின்று
விதிக்கரைசேர் எம்மை விரைந்து.

செந்தூரப் பொட்டுவைத்துச் செவ்வாழை நட்டுவைத்துச்
சிங்காரப் பட்டுடுத்திச் சேர்த்துவைத்த பொன்னணிந்து
வந்தாடும் வாசலுன்றன் கோயிலன்றோ? தாயே! நீ
எல்லாமும் தந்தருள வா.

கற்போரின் கல்வித் திறனுக்கும் கற்றிடச்செய்
மற்போரில் பெற்றோர் மடிவுக்கும் கல்வியை
விற்போரின் வேட்கை முடிவுக்கும் வீரத்தாய்ப்
பொற்பாதம் கூறும் பொருள்.

வெவ்வீர மாமுனியும் வீற்றிருக்க ஆட்சிசெயும்
செவ்வீர மாகாளி சேர்ந்திட்டால் - எவ்வினையும்
சேராமல் இல்லம் செழித்தோங்கிப் பன்னாளாய்
வாராத செல்வம் வரும்.

சீவிக் குழல்முடிக்கும் சிங்காரப் பேதையரின்
ஆவி நிகர்த்தவளே! அன்னை பவானியே!
தாவித் தவழவரும் தண்குழவி போலெம்மை
மேவித் துயர்துடைத்தால் மேல்.

சொக்கும் அழகில் சுடர்விடும் மூக்குத்திப்
பக்கம் அழைத்துப் பரிசளிக்கும் - மக்கள்
மறுவாழ்வு பேணும் கருமாரி யம்மா!
பெறுவாழ்வு மேன்மை பெறும்.

தாங்காத ஆத்திரத்தில் தாண்டவம் ஆடுகின்ற
மாங்காட்டுக் காளியே! மாநிலமும் - தாங்காது
கோபம் குறைத்திடம்மா! கொள்கை விளக்கியெங்கள்
பாவம் பொறுத்திடம்மா! பார்த்து.

வேற்காட்டில் தங்கி விளையாடும் மாரியம்மா!
வேற்காட்டில் எம்மேனி வெம்மையை - ஏற்காதால்
அன்புருகும் தாயே! அருள்மழையால் பாவியேம்
என்புருகற் கண்டே எழு.

முப்பதில்ல மக்கள் முயன்றே வழிபட்டார்
செப்பரிய அன்னாய்! சிரித்துநின்று - தப்பாக
வாழ்வார் தவறகற்றி வந்துன் திருவடியில்
வீழ்வார் பயத்தை விரட்டு.

அம்மனுக்கு வேகம் அளவாகும் தாகந்தான்
செம்முனிக்குச் சற்றும் குறையாமல் - நிம்மியார்
சென்றலூர் வீரப்பூர் சேர்ந்தங்குப் பேசியதால்
வென்றவர் வீரமுனி யார்.

மாப்பிழை செய்தாரும் மன்னிப்பு கேட்பாரும்
வேப்பிலை தாங்கி விரைந்தாலே - பூப்பாளே
புன்னகை பொன்முகத்து மாகாளி காப்பாளே
தன்னகையால் மாரி பொழிந்து

பட்டிருக்கும் மேனிப் பவளத் திருவாயில்
பட்டிருக்கும் பாச மொழித்தேன் கிடைத்திட்டால்
பட்டிருக்கும் பாவம் பனித்துளி போலகற்றப்
பட்டிருக்கும் நம்பிப் பணி.

போதித்த பொய்கைத் தமிழ்முனி யோடங்கு
வாதித்த மேரு வரையரசன் மாதேவி
ஆதித்தன் திங்கள் அழகுறப் போற்றிடும்
சோதித் திருமுகமாம் சொல்.

நிம்மிலி யாண்டவர் நேர்ந்தபண் டாரமாய்
செம்முனிக் காகவே சென்றனர் வீரப்பூர்
அம்மனின் காவல் அகிலம் தெளிவுற்று
மும்மணிக் கோவை தரும்.

கற்றறி வாளர் கலவாத பான்மையால்
உற்றறி வைந்தும் ஒருங்கிணைத் தாறுடன்
பற்றிய பற்றும் பலதிசை யோடிடத்
தெற்றெனக்காண் தேவி யருள்.

கோலங் கடந்த குணத்தாளின் தாள்பணிந்
தாலங் கடந்த அரனாரைப் போற்றிவினைப்
பாலங் கடந்தசீர் பக்திப் பெருக்கறிந்து
சீலந் தருமன்னை சேர்.

என்பு மெலிந்த இளைத்தவர் யாக்கையில்
அன்பு மலிந்த அருள்தருவாள் - முன்பாய்
உருமாறி யாண்டும் உலகாளும் கோதை
கருமாரிக் காளி வணங்கு.

விருந்துபோல் வந்துபல் வீடெலாம் தங்கி
இருந்துதாய்ப் பற்றில் இணைவாள் - மருந்துதான்
அன்னை மகமாயி மாவிளக்கு நெஞ்சே! நீ
முன்னைத் தொழுவாய் முனைந்து.

செம்புமின் பொன்னாகும் சீதேவிப் பேர்சொன்னால்
செம்பாகும் பொன்னும் சிறுமை படைத்தார்க்கே
நம்பாத பேருக்கும் நன்னயம் செய்கின்ற
அம்பாளின் அன்பில் பணி.

கண்டாரும் காணாரும் கொண்டாடும் தாயே! நின்
தண்டாரும் வேல்நுனியும் தாளும் பணிசிந்தை
கொண்டார்க்குக் கூடிக் குலவிமகிழ் வாய்ப்பெல்லாம்
உண்டாகும் என்றே உணர்.

மேகங்கள் வண்ணத்தைத் தீட்டியொரு நீளவில்
வானில் வளைத்திங்குக் காட்டுதல்போல் கார்குழல்
வார்எழில் காளியின் ஆசியில் ஏழிசை
பூமிக் கெழில்தரு மே.

ஓமெனும் மந்திரத் துட்பொருள் கேட்டுணர்
பாமரப் பேரமர் ஈசனோ டேத்திடப்
பூமணக்கப் போவோம் பெரம்பூர் நிறைந்திலங்கும்
தூமலர் அன்னை துணை.

நினைத்து மறப்பதற்கு நெஞ்சம் எழுதிக்
கிழிக்கின்ற ஏடன்று வாழ்க்கை முடிவெனினும்
வந்துன்றன் வாசல் விழுந்திடுவேன் மஞ்சனநீர்
தந்தாலே தீரும் பசி.

எல்லைவரும் தொல்லைகளை இந்தியத்தாய் உன்னிடத்தில்
சொல்லவரும் பிள்ளைகளாய் உள்ளவரில் - நல்லவரும்
நாட்டைப் பகைவர்க்குக் காட்டிக் கொடுக்கின்ற
சேட்டைசெய் வாரும் உளர்.

அரம்போலும் கூர்மையர் அல்லா விடினும்
பெரம்பூரில் மண்ணாய்ப் பிறப்பெடுத் துன்றன்
வரம்பூரில் வாழும் வரங்கேட்டேன் தாயே!
கரங்காட்டி வாழ்விப்பாய் காத்து.

கூடலுக்கு நாயகியே! கூடிவரு வோர்க்குவழி
தேடலுக்குத் தேவியம்மா! தில்லைப் பதியிருந்து
ஆடலுக்கு நாதன் அரசியே! ஏழையேன்
பாடலுக்குள் வந்தாய் பரிந்து.

நாழிப் பொழுதென நான்வாழ நேர்ந்தாலும்
கோழிப் பறவைப் பிறப்பெடுத்தே - ஆழிசூழ்
மேதினி யாளும் பெரம்பூராள் தாள்வீழ்வேன்
மாதரசி யேற்பாள் மகிழ்ந்து.

ஆலயத்தின் சூழற் கழகுதரும் தாம்பரந்து
மேலுயர வேண்டி மிகவிரும்பும் - கால் பெருக்கும்
பாட்டில் கலந்திருக்கும் பன்மரங்கள் போல்யானுன்
வீட்டின்முன் நின்றிடு வேன்.

நன்றே எனப்பலர் நாளும் புகழ
நலம்பெற் றுயர்வுடனே தொண்டுகள் செய்குவம்
இன்றே இருப்பவர் நாளை இலையெனும்
தன்மை மறவா மலே.

பேசற் கரியபெரும் பாளையத் தம்மா! நின்
வீசுகரம் காண விழைந்துவந்த எங்களுக்கு
ஆசையெலாம் உன்றன் அருட்கோயிற் கற்படியாய்
வீழ்ந்து கிடப்பதற்கே வாழ்த்து.

பார்த்தால் பராசக்தி பாளையத் தம்மா! நின்
தீர்த்தம் வினையெல்லாம் தீர்க்குமன்றோ? - வார்த்தாலே
கஞ்சி வளம்பெருக்கும் வாசல் வருகின்ற
பஞ்சத் தவர்கவலை பார்.

பாடுபட்டு மேழிப் பயன்விளைத்து வேண்டுதலால்
ஆடுவிட்டு நேர்த்திக் கடன்கழிக்கும் - வீடுகட்குத்
தாயே! விரைந்திடுக! தாலி உரம்பெருக
நீயே வரந்தருக! நின்று.

சென்றது விட்டு வருவது நாடியே
கன்றது கூட்டுக் கவின்பசு வாய்த்திரு
நின்றது தேடும் நெடும்பற் றுடையதோ
வென்றது நின்னருள் வீடு.

செருப்புரளும் செந்நீர் சிதறுமுடல் தாங்கித்
திருவருளும் தேடித் தினந்திரளும் மாந்தர்
வருபொருளும் நாடி வணங்குமுறை கோடி
பெருமகளே! பேரன்பைக் காட்டு.

ஓடி உழைக்கும் உயர்குணத் தாருக்கும்
தேடிப் பிழைக்கும் தெளிவுடை யாருக்கும்
கூடி மகிழும் குவலயப் பாருக்கும்
நாடி நலம்புரிவாள் தாய்.

கண்ணுக்கு மையிட்டுக், கார்குழலில் பூவிட்டு
மண்ணுக்கு வந்த மதிமுகத்தார் சீர்பேணும்
தண்ணளிகொள் தாயே! கருமாரிக் காளியே! நின்
கண்ணளிக்குக் காத்திருப்போம் காண்.

## குறள் வெண்பா

இரவாய்ப் பகலாய்த் திரியும் புவியில்
உறையும் சிவபார் வதி.

உறவாய்ப் பகையாய்த் தெரியும் முகத்தில்
மகிழும் மலையார் மகள்.

பேரையார் கேட்டாலும் பேருரத் தோடுரை
வீரமா காளி என.

இருப்பது இழக்கா இயல்பது தந்தால்
பொருப்ப ரசிக்கே புகழ்.

கண்ணன் குழலும் களிப்புறச்செய் ஆயிரம்
கண்ணாள் அருளும் திரு.

விண்ணை முழக்கும் வெடிச்சிரிப்புக் காரிமாரிப்
பெண்ணாள் அருளைப் பெறு.

எச்செயல் யாம்செய நேரினும் தாயவள்
இச்சை யறிவோம் இணைந்து.

நஞ்சேனும் நம்பி நலம்பெற யாம்குடிப்போம்
நெஞ்சார நின்னை நினைந்து.

கல்லொடு முள்ளைக் கடும்பாதை தாண்டுவோம்
காளியுன் தாள்பணி ய.

காவடி பால்குடம் மாவிளக் கேந்துவோம்
காலடி வீழ்ந்திட வே.

மஞ்சளில் ஆடைகள் மாற்றி யணிவோம்நின்
நெஞ்சம் குளிர்வதற் கே.

சிரந்தரு பூமுடி சேர்ப்போம்நின் பாதம்
வரந்தரு வாயென வே.

இரக்கம் உகுத்த அரக்கன் அழித்த
உரக்கண் முகத்த வளே!

படிக்கும் முறையில் நடிக்கும் குணத்தை
இடிக்கும் சினத்த வளே!

வெடிக்கும் பழத்துள் இருக்கும் சுளையில்
திளைக்கும் சுவைய வளே!

கடிக்கும் கனிக்குள் உறைந்தே யிருக்கும்
முளைக்கும் விதைய வளே!

கலங்கும் இதயம் விளங்கும் வரைக்கும்
துலங்கும் இனிய வளே!

மயங்கும் மனிதர் தயங்கும் பழக்கம்
அகற்ற அருள்தரு வாய்.

நல்லாரை வீழ்த்திடும் இல்லாரைத் தாழ்த்திடும்
பொல்லா உலக மிது.

நட்பினை வீசியே நாசம் விளைப்பது
வெட்க மிலாதார் செயல்.

வஞ்சகம் பேசியே வாழ்வைக் குலைப்பது
நெஞ்சகம் இல்லார் நிலை.

இல்லிலொரு சோகம் இருப்ப தொளிக்காமல்
சொல்லுமோர் ஆற்றல் அறிவு.

கடையினில் வாங்கும் கலைப்பொருள் எல்லாம்
விடையமர் காளி வினை.

கொடையினில் வாழும் குலமக்கள் காளி
நடையினில் கற்ற கலை.

உலவும் நிலவும் ஒளிதரும் தேவி
நிலவும் நிலந்தனி லே.

கனவும் நனவும் கரம்வரும் அன்னை
கனிவிழிப் பார்வை யிலே.

மலரும் மலருமாம் மாகாளி கேட்டே
புலரும் பொழுதினி லே.

கானதில் மானும் களிப்புறும் வாய்ப்புறும்
காளியின் ஆசி யிலே.

சிவக்கும் விழிகளின் சீற்றம் தெரிந்தே
உவக்கும் வழியறி வோம்.

இடிமுழங்கி வானம் தலைவீழ்ந்த போதும்
படியளக்கும் தாயைப் பணி.

சிம்மா சனத்தில் சிரிப்புடன் வீற்றிருந்து
அம்மா அருள்தரு வாள்.

புறத்திருளைக் கண்டு புலம்பும் மனிதர்க்
ககத்திருளைப் போக்கி அருள்.

மங்கலங்கள் தந்திடும் மாகாளித் தாயே! நின்
செங்கரங்கள் நீட்டெம்மைச் சேர்த்து.

ஊராளும் உன்றன் கரம்பிடித்தே உள்ளன்பால்
பாராளும் பெம்மான் துணை.

வத்தனாக் கோட்டை வடக்கினில் பெற்றனள்
பித்தனார் பெற்ற பிணை.

பாரி மலைப்பறம்பின் பைந்தண் பொழில்மணத்தை
மாரி யருள்தரு மே.

இரப்பார்க் கிழிவெஞ்சும் ஈதலுடன் அன்புச்
சுரப்பால் அறியப் பெறும்.

வினைகள் அகற்றிடும் நோன்பு மயக்க
மனித மனத்திற்கு மாண்பு.

புலனொடுக்கம் இல்லாப் புவிமாந்தர் காணின்
நிலநடுக்கம் தாமே வரும்.

ஏகம்பன் மார்பில் இடம்பெறறாள் மீனாட்சி
பூகம்பம் காப்பாள் பொறுத்து.

இனத்தால் பணத்தால் உயர்வாய் நினைத்தால்
பிணத்திற் கிணையா னவன்.

மனத்தால் குணத்தால் உழைப்பால் உயர்ந்தால்
மலைமேல் விளக்கா னவன்.

புறமாய்த் தெரியும் பலவாம் பொருள்மேல்
விருப்பம் புரியா மலே.

அகமாய் ஒளிரும் பெரம்பூர் நிலவும்
மகமாயி நாளும் தொழு.

கொஞ்சமும் நெஞ்சிலே வஞ்சமே இல்லையேல்
கோமகள் வாழ்த்திடு வாள்.

நல்லதைச்செய் நாடும் வழிவிடும் சால்பென்ப
தல்லதை அன்றே அழி.

உள்ளதைச்சொல் ஊரும் புகழ்ந்திடும் உள்ளம்
உணர்வதை அஞ்சா துரை.

உண்மை சிலகாலம் ஓய்வெடுக்கும் உன்னைத்
தளர்த்தும் தயங்கா திரு.

சிரித்துநாம் பேசுவோம் சிந்தித்துச் செய்திடுவோம்
சேர்ந்திடும் வெற்றி நமை.

சொன்னதைச் செய்திடு சொந்தமாய்ப் போரிடு
மன்பதை மண்டி யிடும்.

அயலவர் தம்மை அறிந்திடு முன்னர்
முயன்றுநீ நின்னை அறி.

நிறைபெறநில் கோபத்தைக் கொல்குணத்தைப் போற்று
முறைபெறநில் வேட்கையை வென்று.

வருவாய் பெருக்கி வளமார் நிலையைத்
திருவாய் மலர்ந்தருள் வாய்.

ஒருவாய் உணவுக் கவளம் தருவாய்
திருவாய் நிறைந்ததாய் நீ.

அன்னை உனைத்தொழும் பிள்ளை நினைத்தழும்
முன்னை வினைப்பய னால்.

வெள்ளைப் புனலிலும் துள்ளித் தவழ்ந்திடும்
வீரமா காளி முகம்.

வினையோடும் வாழ்விலே வீரமா காளித்
துணையோடு வாழ நினை.

# சிந்தியல் வெண்பா

விருப்பமுற வேண்டும் வினையறுக்க வேண்டிச்
செருப்புகவே நேரினும் செய்து முடிப்பாய்
பொருப்பழகுப் பூரணி நீ!

கந்தனுக்குத் தாயவள்முக் கண்ணனுக்குத் தாரம்மு
குந்தனுக்குத் தங்கையவள் அன்னை சிவசக்தி
சொந்தமெனச் சொல்மன மே!

நின்றதிர நோக்கி நிலத்தில் அடிவைத்தால்
வென்றெதிரி வீழ்த்தும் விறல்கொண்டாள் - சென்றவளின்
பாதத்தில் வீழ்வாய் பணிந்து.

குயிலூதும் நாதம் கடலோரத் தோதம்
குழலூதும் கீதம் இவையாவும் சேர்ந்தே
அவளோதும் வேதம் அறி.

மயிலாடும் கானம் முகிலாடும் வானம்
வயலாடும் மீனம் இவையாவும் காளி
தினமாடும் மேடை தெரி.

போராடும் வீரர் புகழாடும் மார்பணியும்
தாராடும் பூக்கள் தழைத்தாடும் சோலைவள
ஊராடும் தாயை உணர்.

தொழுது வலம்வந்தே தொண்டாற்றும் பல்லோர்
அழுது புலம்புவது ஆத்தாள் கருணை
விழுதூன்றச் செய்யும் விழைந்து.

சுந்தரக் கண்முகத்தாள் சூரியப் பொன்னிறத்தாள்
சந்தனத் தண்மணத்தாள் சங்கமப் பூவிழியாள்
வந்தனள் வாழ்த்துதற் கே!

ஆடுவதும் பாடுவதும் அம்பாட்குப் பூக்களினைச்
சூடுவதும் பொங்கல் படைத்துப் புதுவிழாகொண்
டாடுவதும் ஆலயத்தே காண்.

திருநடனம் காட்டுமந்தத் தில்லையான் தேவி
வருபுவனம் தேடித் திரிபவரின் வாழ்வில்
திருவருளும் கோடி தரும்.

மொழிதீட்டும் பாக்கள் முடிபறியா மாந்தர்
பழிகூட்டும் பாதை பறந்திட்டால் மாற்றி
வழிகாட்டு வாள்தாயே வந்து.

கவிஞர்தம் நாவில் கலைநடனம் செய்வாள்
கலைஞர்தம் வாழ்வில் உறுதுணை நிற்பாள்
புவியாளும் அன்னை யவள்.

செம்மண் சிறக்கச் செயல்திற மேந்திய
மம்மர் அறுத்த மனத்தார்க்கு நீளுமே
அம்மன் அளிக்கும் அருள்.

எல்லார்க்கும் ஈயும் திறந்தந்து யாதொன்றும்
கொல்லாமை சூழும் குணமளிப்பாள் மாகாளி
பல்லாண்டு நாள்தோறும் பாடு.

காடுகரை சேர்த்தாலும் மேடுபள்ளம் பார்த்தாலும்
மூடுதிரை போட்டாலும் பாடுகிற பாட்டாலுன்
வீடுவரை வந்தோம் விழைந்து.

மஞ்சளில் ஆடை மகிழ்விக்கும் நின்கோவில்
தஞ்சமாய் வந்த தமியர்க்கும் மென்மேலும்
பஞ்சம் படர்தல் தவிர்.

இயற்கைச் சுவாசத்தில் இன்புற்ற மாந்தர்
செயற்கையை வாசிக்கும் போதங்குச் சீற்றம்
தெரிவது தேவி செயல்.

**தேவித் திருவிளை யாட்டில் மலர்களைத்**
**தூவித் துதித்திடல் வேண்டும் அவள்முக**
**பாவம் அறிந்து தினம்.**

கல்வியுடன் செல்வம் கவினுடல் வன்மையென்
றெல்லாம்எம் வாழ்க்கைத் துணையாய் இருந்தென்றும்
வல்லமை தந்திடவே வா.

பிறந்தே இறக்கும் வரைக்கும் மகிழ்ந்தே
உலகுக் குழைக்கும் மனத்தை எமக்கு
வழங்கிக் களித்திடவே வா.

அயரா துலகில் வலமாய் வருந்தாய்
உயிராய்க் கருதி உளத்தில் இருத்தி
உயர்வைப் பெறுவோம் உழைத்து.

அலைகடல் சூழும் உலகுடன் வாழும்
கலைபயில் மாந்தர் நிலைஉயர் வாக
மலைமகள் கூட்டும் மனம்.

**வீக்கணங் கார்நகில் தேக்குறு வார்சுகம்**
வாக்கடங் கார்பலர் வாய்த்திட நோவதை
நோக்கணங் காய்மனம் நொந்து.

பல்கும் பொருட்சுவையும் பற்றில் அருட்சுவையும்
மல்கும் பெரும்புகழும் மங்கை மகமாயி
நல்கும் தினந்தோறும் நம்பு.

எங்கும் மகிழ்வே இலங்கத் திகழ்ந்தெழில்
பொங்கும் அரியில் பொருந்த இருந்து
புவனம் வலம்வரு வாள்.

நெஞ்சத்தில் கொள்ளி நெருப்பள்ளிப் போட்டாற்போல்
மஞ்சத்தில் துள்ளி மடவார் துணைநாடிப்
பஞ்சத்தில் வீழ்வார் பலர்.

சேயழும் ஓசை செவிதனக் கெட்டிடின்
வாயமுதம் ஈந்து வளர்கவி யாக்கிடும்
தாயுனக் கில்லை யிணை.

காரோடும் கோயில் கதிராடும் செந்நெற்கண்
போராடும் இன்பம் புரண்டாடும் உள்ளந்தான்
ஊராடும் காளி உனக்கு.

பிஞ்சுதிர்க்கும் செஞ்சொற் பெருமகிழ்வு தான்மறந்து
நஞ்சுதிர்க்கும் நாவை நலமார் நெறிசேர்க்கும்
அஞ்செழுத்தே வீரமாகா ளி.

கெடுவார் கெடநினைப்பார் கெட்டபின் தாமாய்
விடுவார் விடநினைப்பார் வெவ்வினைகள் தாளைத்
தொடுவார் தொடநினைப்பார் வீடு.

# பஃறொடை வெண்பா

சிவந்தமுக நெற்றியில் செந்தூரப் பொட்டுவைத்து
(உ)வந்துவந்து ஏற்கும் உலகத்தின் நாயகியே!
சீற்றம் விழியில் சிறக்கின்ற வேளையிலே
மாற்றம் வழங்கி மனத்துயர் போக்கியுடன்
ஏற்றம் எமக்களிப் பாய்!

பூவுக்குள் நீயிருந்து பூகம்பம் ஏற்படுத்தி
வானுக்குள் நீபறந்து வண்ணமழை தூவுகிறாய்!
கானுக்குள் நீசினந்து காட்டுத்தீ யாகின்றாய்!
ஏனெனக்கு மட்டும் இடர்கோடி யாத்தாவே!
தேனொடு பால்படைப்பேன் தீர்.

கல்லைப் பிளந்துதரும் கைகள் உடையார்க்கும்
எல்லை விழித்திருக்கும் ஏவும் படையார்க்கும்
கொல்லைப் புறத்தொளியும் கோழை மனத்தார்க்கும்
ஒல்லை அகத்திருளை ஓட்டும் துறவியர்க்கும்
முல்லைச் சிரிப்புடன்முன் தோன்றியருள் செய்தாயே!
இல்லை எனாதீவாய் இங்கு

தம்பியோர் அண்ணனையும் அண்ணனொரு தம்பியையும்
வெம்பகையில் ஆள்வைத்து வீழ்த்தும் தகவிலவர்
செம்பாதி உள்ளார் செகத்தில் அறிவீரே!
நம்பியவர் பக்கமொரு நட்புவலை வீசுவதும்
செம்பவள வாய்மாதர் சேர்ந்துபொருள் பேசுவதும்
சம்பளமும் போதாமல் சன்மானம் வாங்குவதும்
கம்பளிப் பூச்சியெனப் பல்பொருளைத் தீண்டுவதும்
தம்பிழை தாம்மறந்து தக்காரைத் தண்டித்தும்
சாதிமதச் சண்டையினில் சாக்கடையில் வீழுவதும்
மேதினியில் ஓதுகல்வி மேல்விலைக்குப் போவதுமாய்
வேதனைகள் வந்தால் வியனுலகம் தாங்காதே
ஆதிசக்தி! கண்திறப்பாய் காத்து.

கல்லாமை யோடிருக்கும் காட்டு விலங்குகட்கும்
இல்லாமை யாலிரங்கும் ஏழை மனிதருக்கும்
வில்லாளும் வேந்தருக்கும் வென்றாளும் வாள்கொடுக்கும்
சொல்லாளும் நாவலர்க்கும் சூழும் திறனளிக்கும்
வல்லாண்மை மாரிக்கே வாய்த்திருக்கும் யாவருக்கும்
நல்லாற்றைத் தந்திடுவாள் நாடு.

இட்ட பணிசெய் தினிதே முடித்திடக்
குட்டியும் முட்டியும் கொண்டு, குறைகளை
அட்டியின்றிப் போக்கி அகமகிழும் வீரமுனி

நின்றவணம் செம்முனியை நீணிலத்தில் ஆழ்த்திவிட்டு
என்றும் இருப்பதிவ் வூர்.

கங்கைக்குத் தங்கையா காளியம்மா? காடாளும்
சிங்கத்தின் தேவியே! சேது சமுத்திரமும்
வங்கக் கடலுமுன்றன் வார்குழலா? புன்னகை
பொங்கிடும் பூமுகந்தான் வான்மதியா? முத்தமிழ்ச்
சங்கத் தமிழ்நூல்கள் பூணணியா? பூவடிச்
சங்கமத்தை நாடுகிற சாதனைகள் தேடுகிற
எங்களுக்கு நல்லவழி காட்டு.

பிஞ்சுமொழிப் பிள்ளைகளின் பேசும் மழலையினில்
கொஞ்சுமொழி வஞ்சியரின் கொவ்வை யிதழ்த்துடிப்பில்
தஞ்சமெனக் கெஞ்சிவரும் தக்காரின் நாவசைவில்
செஞ்சடையார் நெற்றிச் சிவக்கின்ற கண்ணொளியில்
மஞ்சளுடை தாங்கி மனமுருகும் பக்தியினில்
வெஞ்சமரில் நஞ்சறுக்கும் வீரமா காளியெனும்
அஞ்செழுத்தாள் நிற்பாள் அறிந்து.

திரிபுரம் தீய்த்த விரிசடைத் தேவன்
ஒருபுறம் சேர்ந்த கருமாரி தேவி!
வருவினை தீர வருகுவம் கோயில்
தருகுவை நீயே திருவருள் தாயே!
உருகுவம் நின்னை உணர்ந்து.

ஆற்றங் கரையில் அழுத்தம் நிலைப்பதால்
சேற்று வயல்கள் செழிப்பில் திளைத்திடும்
கூற்றைத் துரத்திடும் கூர்ம்படை கொண்டதால்
மாற்றுத் திறத்தவர் மண்டியிட் டேத்துவர்
போற்றிப் புகழ்பாடிப் பொங்கல் படைத்துன்றன்
சீற்றம் தணித்திடவே செங்குருதிப் பொங்கலிட்டு
ஆற்றும் மனத்தார் உயிர்க்கோழி வாசலிட்டு
ஊற்றுநெய் மாவிளக்கில் உன்கோவில் மேலொளிர
நூற்றுக் கணக்கானோர் நோகும் குரல்கேட்டுப்
பாற்று மயிர்ப்பிடரி சாய்க்கும் சினத்தரி
ஏற்றில் வலம்வரும் இன்பத் திருவிளக்கே!
மாற்றம் வருத்திடம் மா.

மாசறு பொன்னாய் மறுவிலா முத்தென
வீசறு தென்றல் விளைத்திடும் இன்பென
மூசறு வாச மலரின் மணமென
ஆசறு நூலின் அரிய கருத்தென
ஈசன் பரமன் இணையடிச் சூழ்ந்தெமைத்
தேசுறும் தேவி யருள்.

சிறுசுகம் பெண்ணகில் தந்ததில் இன்னல்
உறுவது அறியா திருந்தனன் யானே
எரிசுடர் பொன்விழி யால்சின வாதே!
திருந்திடச் செய்தல் திருப்பணி யன்றோ!
திருவடி கொண்டே திருத்து.

திருகும் குழாயில் தெறிக்கும் துளியில்
திரும்பும் திசையில் விரும்பும் வெளியில்
உதிக்கும் கதிரில் உலவும் புதிரில்
பதிக்கும் பயிரில் மதிக்கும் உயிரில்
கூடரும் முகிலில் இடரும் துகிலில்
அசைகிற கீற்றில் விசையுள காற்றில்
சுவைமிகு மூற்றில் மலர்நிறை சேற்றில்
கவிஞர் கருத்தில் கலந்தே நிறைந்து
மணக்கும் மலரே! மலைமகள் வீரமா
காளியே கைகொடுப்பாய் காத்து.

தேடாத் திசையான் திருமலையான் தங்கையவள்
நாடா தனவெல்லாம் நாடவைக்கும் நங்கையவள்
ஆடா தனவெல்லாம் ஆடவைக்கும் மங்கையவள்
சூடா மலர்த்தோகை சூரியன் போல்முகத்தாள்
கோடாக் குணத்தாரைக் கொண்டிருக்கும் தாயவள்தான்
வீடாய்ப் பெரம்பூரில் வீற்றிருக்கும் மாகாளி
வாடா தெமைக்காப்பாள் வந்து.

முடைவீச வாழ்ந்து முடங்கிக் கிடந்து
படைவீசும் ஆற்றல் பயனற்றுப் போயின்
மடைவாசற் கொக்காய் மனமுடைந்து தோற்பீர்
கடைவாசற் காளி கருத்தில் இருத்தி
நடைவாசல் வேண்டுகவே நன்கு.



8

மன்பதையே வாழ்த்தும் சமய புரத்தாளே
அன்பிலூர் போற்றுகிற அன்பிலூர் மாரி
வணங்குவோர் போற்றும் வளம்ப குடியாளே!
மேல்மரு வத்தூரில் ஆதி பராசக்தி
மேதினி காக்கும் பெரியபாளை யத்தம்மன்
வேலோடு சூலேந்தும் வேற்காட்டு மாரியம்மன்
காண்பவர் காட்சிதரு காஞ்சிகா மாட்சியவள்
காசினியை ஆட்சிசெயும் காசிவிசா லாட்சியவள்
வெற்பரசன் பெற்றஎம் வீரமா காளியே
வெற்பரச னோடு விடையமர்ந்த தேவியே
கற்பதற்குக் காப்பாகக் காலங் கழிக்கின்றோம்
பொற்பதங்கள் போற்றிப் புகழ்ந்து.

காமே சுவரீ! கமலே சுவரி நீ!
வீரே சுவரீ! விமலே சுவரி நீ!
மாதே சுவரி நீ! மந்த்ரே சுவரி நீ!
யோகே சுவரி நீ! வாகீ சுவரி நீ!
மாயே சுவரீ! மகேசு வரியு நீ!
கோதே சுவரி நீ! கோடீ சுவரி நீ!
பாகே சுவரீ! பரமே சுவரீ!
புவனே சுவரிநீயம் மா!

மண்ணின்ற மானிடர் பேரிடர் நீங்கிடக்
கண்ணின்ற தேவி கருமாரி போற்றிடின்
உண்ணின்ற சோதி ஒளிரும் உணர்ந்தின்று
விண்ணின்ற வீரமா காளித் திருப்புகழைப்
பண்ணின்று பாடிப் பணி.

ஓடவல் லார்க்காய் உதவும் கரத்திறனும்
தேடவல் லார்க்குத் தெரியும் பொருட்சுவையும்
நாடவல் லார்க்கு நயக்கும் நலம்பலவும்
ஆடவல் லார்க்கே அருகமர்ந்த நாயகி
கூடவல் லார்க்கே உரித்து.

மதுவாய் மலரிணை மங்கையர் நோக்கால்
அதுவாய் இதுவாய் அகச்சுவைப் போக்கால்
எதுவாய்ப் படரினும் இன்னலே சூழும்
கதுவாயைக் காட்டிக் கனிவினைக் கூட்டிப்
பொதுவாகக் கொண்டெமைப் போற்று.

## வெண்கலிப்பா (கலிவெண்பா)

வாளிகொண்டு வதையழிக்கும் வாழ்வார்க்கு நலமளிக்கும்
காளியுன்றன் திருவருளால் காலமகன் புறந்தரவே
கூளித் திரள்வரினும் கொள்ளேன் இரவச்சம்
ஆளித் துணையிருக்க ஆம்.

நீரேறும் நிலத்தேறும் நிறைசெந்நெற் கதிரேறும்
போரேறும் களத்தேறும் புகழேறும் உழவர்க்குப்
பார்தோறும் போற்றும் படியேறும் பேர்கொடுப்பாய்
சீரேறும் தாயே சிறந்து.

பெருவளங்கள் தருநிலங்கள் பிறைநுதலாள் திருவடியே
கருவுளங்கொள் பராசக்தி விரும்புகிற அருமறைகள்
வீற்றிருக்கச் சாற்றுகிற வீரமா காளியுனைப்
போற்றிடுவோம் பூமாலை போட்டு.

தேவர்க்கும் தினந்தேடும் வினையாற்றும் கள்ளர்க்கும்
யாவர்க்கும் உவந்தீயும் அகமுடையார் புடையமர்ந்தே
சேவற் கொடியாற்கும் வேழ முகத்தாற்கும்
தூவும் அன்புகொடு தொட்டு.

கைராசிக் கலைகாட்டிக் கருமாரி மாகாளி
வைகாசி முதல்வெள்ளி வரலாற்று விழவேற்றுப்
பேட்டைப் பெரம்பூரில் வீற்றிருந்து வீட்டெருமை
மாட்டின் பலிமறந்தாய் மாண்பு.

தீயினுக்குள் திகைத்தெழுமோர் தெறலாகும் இலைமறைந்த
காயினுக்குள் கனிந்திருக்கும் சுவையிலவள் கருணையன்றோ?
தாயினுக்குள் தாயாய்த் தலைமைபெறு தண்மைதர
வாயிலுக்கு வந்தெம்மை வாழ்த்து.

பொய்பேசி விலைபோகும் கலைமேவு திறமாந்தர்
கைவீசிப் பொருளீட்டும் வழிதேடி யலைகின்றார்
மெய்பேசி ஈகின்ற பண்பளிக்க மாகாளி
வைகாசி வெள்ளியிலே வா.

கொண்டாடி மகிழ்வார்க்கும் கொடும்பசியால் குடும்பமெலாம்
திண்டாடித் தவிப்பார்க்கும் திசைகாட்டும் கருமாரி
வண்டாடும் பூஞ்சோலை மாகாளித் தாயாலே
உண்டாகும் வாழ்வில் உரம்.

வேற்றுமைகொள் மனத்தவரை மாற்றுவ தெளிதாமோ?
நூற்றுவர்கள் ஏற்றநிலை கூற்றுவற் கரிதாமோ?
சீற்றமது மிகக்கொண்டு சிந்தியா தாரெவர்க்கும்
ஆற்றலது வீணாகி அழியுநிலை தான்வருமே!
போற்றுதிரு மாகாளிப் பொன்னொளிரும் பூமுகத்தை
ஆற்றுகிற நோக்கோடு அருள்வேண்டி நோக்கிடினே
காற்றுவரு திசைவருவாள் காண்.

# தாய்

அழுகின்ற காலத்து ஆட்டித் தொட்டிலிட்டுப்
பசிக்கின்ற காலத்துப் பால்சோறு தந்து,
வேர்க்கின்ற காலத்து விரும்பி விசிறிவிட்டுத்,
தோள் நனைந்த போது துண்டால் துவட்டிவிட்டுப்,
பள்ளிகளின் வாசலிலே பைகொண்டு நின்றிட்டுத்,
துள்ளிவரும் வேளையிலே தூக்கியணைத்திட்டுப்,
பிள்ளைகளின் வளர்ச்சியே பேரின்பம் எனக்கருதி,
அழகுத்திருவுடலை அன்றாடம் குளிப்பாட்டிப்,
பழகுதாய்மொழியில் பாசம் பகிர்ந்தளித்துக்,
கண்ணுக்கு மையிட்டுக் கருங்கூந்தல் பூவிட்டுக்,
கண்ணடிக்காய்க் கன்னத்தில் கரும்பொட்டு வைத்திட்டு,
விண்ணுலக தேவதைபோல் விளையாடும் தன்மகளைக்,
கண்ணுற்ற தாய்மனம்போல் களிப்படைவர் யாருளரோ?
முன்னே நடக்கவிட்டு முத்துச்சிரிப்பழகன்
மன்னன்போல் நடக்கின்றான் மகராசன் என்றெல்லாம்
அன்னை மகிழ்வதுபோல் ஆரெவர்தான் மகிழ்வாரோ!

## தளராதே!

சோலையாயிரு சூறைக்காற்றில் சுழன்று விடாதே!
வேலையாயிரு. வேர்வை சிந்த வெட்கப் படாதே!
அருவியாயிரு. மலைகளைக் கண்டு மலைத்து விடாதே!
தென்றலாயிரு. புயலைக் கண்டு புலம்பி அழாதே!
பூக்களாயிரு. முட்களைக் கண்டு முடங்கி விடாதே!
வீரனாயிரு. போர்க்களம் தன்னில் புறமுதுகிடாதே!
புனிதனாயிரு. போதனை எல்லாம் மறந்து விடாதே!

மனிதன் நீ! மண்ணன்று
சிந்தனை கொண்டே செயற்படு - பிறர்
நிந்தனை கண்டே பயப்படு
பொதுமை கிடைக்கப் போர்தொடு - பல
புதுமை படைக்கப் புறப்படு
கயமை அகற்றத் துணிந்திடு - மதித்
திறமை வளர்க்கப் பணிந்திடு
வானைக் கையால் வளைத்திடு - அதில்
வண்ண நிலவாய்த் திளைத்திடு
காளியின் கருணை நம்பிடு - தினம்
காலை மாலை கும்பிடு.

# கண்ணீர் வெப்பம்

அன்றாடம் உழைப்போரின் அடுப்பங்கே எரிவதில்லை
ஏழையின் அடிவயிறு எரிவதுதான் தெரியவில்லை
வறுமை வெப்பத்தில் வாடுகின்ற போது
குளிர்காயும் கூட்டத்தின் வெறி அடங்காது!
கண்ணீர்ப் பூக்கள் கருகும் வரைக்கும்
வெந்நீர் ஊற்ற விரும்புவர் ஏனோ?
இல்லாதார் எல்லாரும் ஒருநாள்
சிந்தனை கொண்டு சிலிர்த்தெழுந்தால்
எந்த நாடும் எரிந்தே போகும்!
பசிக்கின்ற வயிற்றுக்குப் பால்வார்க்கா விட்டாலும்
நீர்ஊற்ற வேணும் நினைக்க வேண்டும்
பணப்பித்து கொண்டு பாமரனை வாட்டினால்
படுக்கையில் விழுந்தபோது பார்க்கவும் வரமாட்டான்
சிந்துகின்ற கண்ணீரின் வெப்பச் சேர்க்கை
செல்வவளத் தோடுன்னைச் சேர்த்தெரிக்கும்
கொட்டுகின்ற செங்குருதிக் கூட்டம் சேர்ந்தால்
ஆறாய்ப் பெருக்கெடுத்து அழித்தே தீரும்
கண்ணீரின் வெப்பம் தாங்காமல் ஒருநாள்
கல்லறைக்குப் போவாய்!
போகின்ற இடம்அது பொற்றாமரைக் குளம்அல்ல
புனிதம் தேடிக்கொள்ள!
மனிதம் வளர்க்க மாகாளி போற்று!
மன்பதை வாழ்த்தநின் மனநிலை மாற்று!

தாக்கவரும் பேரிடராம் கடல்தவிக்கும் - அன்பர்
காக்கவரும் கரமுடையாள் கருமாரி!
போக்கறிந்து வரவுதனை மேற்கொள்ள - பொங்கும்
வாக்களித்து மகிழ்விக்கும் வடிவழகே!
தேக்கிவைத்த பேரானந்தத் தெள்ளமுதே! - எங்கும்
நீக்கமற நின்றிலங்கும் ஒளிப்பிழம்பே!
ஊக்கமெலாம் ஒன்றிணைத்தே உருப்படியாய் - எம்மை
மாக்கவிஞர் ஆக்குகிற மாகாளி!

- இராம. சிதம்பரம்



DON BOSCO OFFSET PRINTERS, THANJAVUR.